ஓம்
பரப் பிரஹ்மணேநம:

# விசார சாகர சார சங்கிர:

இஃது
திருவண்ணாமலை
சிவத் தொண்டர் திருக்கூட்டத்
தலைவராகிய
மு. ரா. அருணாசல
முதலியாரவர்களால்,

திருவண்ணாமலை
நேஷனல் அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.



1909.

# அவதாரிகை.

தர்மம். அர்த்தம். காமம். மோக்ஷம் என்னும் புருஷார்த்தம் நான்கினுள் மோக்ஷமே பரம புருஷார்த்தமாம். துக்க நிவிர்த்தி சுகாவாப்தி ரூபமான அம்மோக்ஷத்தை விளக்கும் வேதாந்தக் கிரந்தங்கள் சமஸ்கிருதத்திலும், பிராகிருத பாஷைகளிலும் அநேகமுள்ளன. இவற்றுள் ப்ரக்யாதிவிசிஷ்ட பண்டிதசாது ஸ்ரீ நிச்சலதாஸரவர்களால் ஹிந்திபாஷையில் இயற்றப்பட்டுத் தற்காலம் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு வழங்கிவரும் அத்தியபூர்வமான விசாரஸாகரக் கிரந்தமானது விஸ்தீர்ணமாயிருத்தலின், அதிலுள்ள முக்கிய விஷயங்கள் சிலவற்றைத் தொகுத்து மதபேதவாதங்களில் மனஞ்செல்லாத சாந்தசித்தரான உத்தம முமுக்ஷுக்களுக்கு உபயோகமாமெனக் கருதி யிக்கிரந்தம் எழுதப்பட்டது.

பரப்பிரம்மணே நம:
மங்களாசரணம்.

எது சுகநித்திய மொளிவிபுப்பெயருரு
வாதாரம்
அதுவக மதிமதி யாதுமதித்திடுமொல
மபாரம்.

சுகமாய், நித்தியமாய், பிரகாசமாய், வியாபகமாய், நாமரூபவாதாரமாய், †புத்தியறியாததாய், *புத்தியறிவதாய் சுத்தமாய், அபாரமாய், உள்ளபிரஹ்மம் எதுவோ: அதுவே நான்.

என்றால், அகம் பத வாச்சியமான நான் எனும் அகங்காரரூப ஜீவத்வம் விட்டு அவ்வகம்பதலக்ஷ்யார்த்தமான ஆத்ம சைதன்யமாத்திரமாய்ச் சேஷித்துநின்ற தானாக விளங்குவது பிரஹ்மம் என்பது கருத்து.

---

†புத்தி அல்லது மலின புத்தியெனவும் *புத்தியை அல்லது நிர்மலபுத்தி யெனவும் இருபொருட்படும்.

இது:

"யாறுகியவென்னை விழுங்கிவெறுந்
தானாய் நிலை நின்றது தற்பரமே."

என்னும் அருணகிரியார் வாக்கா
னும் பெறப்படும்.

## நூல்.

பூர்வ ஜன்மாந்தரங்களிற் செய்த நிஷ்காம கரும உபாசனைகளால் அந்தக்கரணத்திலுள்ள மல (பாப)விக்ஷேபங்களற்று நிர்மல ஏகாக்கிர சித்தனாய் சொரூபத்தை யறியாத ஆவரண தோஷ மாத்திரத்துடன் கூடி விவேகம், விராகம், சமாதி ஷட்கம், முமுக்ஷுத்வம் எனும் சாதன சதுஷ்டய சம்பந்நனாகிய உத்தமமோக்ஷாதிகாரி சம்சாரதுக்கத்துக் காற்றாது தயாளுவாய் வேதாந்தார்த்தமறிந்து பிரஹ்ம நிஷ்டராயுள்ள சத்குருவைச் சந்தித்

எங்ஙனங்கூடும்?

கு. கையிலுள்ள கங்கணத்தை மற
ந்து தேடியபின் கிடைத்தது போற்றே
ன்றுங்கள் சம்பிராப்தியும், எப்போ
தும் விளங்கா நின்ற ஜீவாத்மாவாகிய பிரா
ந்தியாலேற்பட்ட ரஜ்ஜு ஞானத்தால்
நிவிருத்தியானது போலன்றும்
சர்ப்பநிவிருத்தியும்போல் கூடும்.

சி. ஒரு போது பதார்த்தத்தில்
அஸத்தின் அபாவமும் ஆனந்தத்தி
ன் பாவமும் (இருப்பும்) இருக்குமா?

கு. கற்பித சர்ப்பாபாவம் அதிஷ்
டான ரஜ்ஜுவாயிருத்தல்போலக் க
ற்பித துக்க அபாவமே அதிஷ்டான
ஆனந்தமாகலின். இருக்கும்.

சி. விஷய சம்பந்தத்தாலேயே ஆ
னந்தமுண்டாதலால் நான் ஆனந்த
மெனல் எங்ஙனம்?

ரு. ஆத்மாவை (தன்னை) யறியாதவனுக்கு விஷய இச்சையால் சலிக்கும் புத்தியில் ஆத்மானந்தம் விளங்காது. இச்சித்த அவ்விஷயம் லபித்தவுடன் க்ஷணிகஸ்திரப்பட்டு அந்தர்முகமான புத்தியில் அவ்வாத்மானந்தமே பிரதி பிம்பித்து விளங்குகின்றதால் விஷயத்தில் ஆனந்தமுண்டானதாய்ப் பிரமையுண்டாகிறது. ஆனால் வேறு விஷயத்தில் ஆசையுண்டானால் இவ்வானந்தம் நீங்கலாலும், தேசாந்தரம் போய்வந்த புத்திரனிடத்தில் போல ஆனந்த ஹேதுவான விஷயமிருக்கும்வரை அவ்வானந்தம் நீடித்திராமையாலும், சமாதி சுழுப்திகளில் விஷயமின்றியே ஆனந்தம் விளங்கலாலும் விஷயத்தி லானந்தமில்லை. ஆத்மாவே ஆனந்தமாம்.

ஆத்மானந்தமே எல்லா ஜீவராலும் அனுபவிக்கப்படுகிறதென்னுங் கருத்தைப்பற்றியே ஸகல ஜீவர்களும் ஆனந்த சொரூபிகளென வேதம் கோஷிக்கின்றது.

சி. ஆனல் ஆத்மாவை யறிந்த ஞானிக்கு விஷய இச்சையும் சுகத்தின் விளக்கமும் உண்டா? இல்லையா?

கு. அஞ்ஞானியைப்போல் விஷய வாசையும் சுகத்தின் விளக்கமும் உண்டாயினும் அச்சுகத்தை ஞானி ஆத்ம சுகத்தினும் வேறாயறிவதில்லை.

சி. ஜனனமரணாதிரூபசம்சாரதுக்கம் பிரத்தியக்ஷமாயிருக்க என் னிடமெப்போதுமில்லையென்பதெப்படி?

கு. ஜன்மாதி ஜகத்து பிரஹ்மரூப உன்னாத்மாவையறியாத அஞ்ஞானத்தால் ரஜ்ஜு ஸர்ப்பம், ஆகாச நீலம்,

ஸொப்பனம் இவைபோலப் பொய்யாய்த் தோன்றுகின்றன.

சி. இந்த அபார ஜகத்துக்கு ஆதாரமேது?

கு. ரஜ்ஜுவையறியாததால் தோன்றும் மித்யா சர்ப்பத்திற்கு ஆதாரமும் அதிஷ்டானமும் ரஜ்ஜுவேயாதல்போல உன்னையறியாததால் தோன்றும் ஜகத்திற்கு ஆதாரமும் அதிஷ்டானமும் நீயே.

சி. ஆதார அதிஷ்டான விவரத்தைப் பகுத்துக் கூறவேண்டும்.

கு. மித்யாசர்ப்பத்திலும் "இது" எனக்கலந்து தோன்றும் ரஜ்ஜுவின் "இது" என்னும் சாமான்ய அம்சம் போல மித்யாஜகத்திலும் 'உள்ளது' எனக்கலந்து தோன்றும் ஆத்மாவின் சாமான்ய வடிவமாகிய சத்ரூபம் ஜக

த்திற்கு ஆதாரமாம். ரஜ்ஜுவின் "ரஜ்ஜு" என்னும் விசேஷ அம்சம் போல பிராந்தி காலத்தில் தோன்றாது. தான் தோற்றுவதால் பிராந்திக்கு விஷயமான அசங்க, கூடஸ்த, நித்ய முக்த, வியாபக முதலிய ஆத்மாவின் விசேஷ வடிவம் ஜகத்கற்பித அதிஷ்டானமாம்.

ச. சர்ப்பத்திற்கு ஆதாரமும் அதிஷ்டானமுமாயுள்ள ரஜ்ஜுவிற் கந்நியமாயிருக்கும் திருஷ்டாவைப் போல ஜகத்திற்கு ஆதாரமும் அதிஷ்டானமுமாயுள்ள எனக்கந்நியமான திருஷ்டா யார்?

கு. அதிஷ்டானம் ஜடமாயின் வேறு திருஷ்டா வேண்டும். அதிஷ்டானம் சேதனமாயின் அதுவே திருஷ்டாவாம். சொப்பனத்திற்கு அதிஷ்

டானமான சாக்ஷிசேதனமே சொப்ப
ன திருஷ்டாவாதல்போலஜகத்திற்கு
திருஷ்டாவும் நீயே.

சி. சொப்பனம்போல ஜாக்ர ஜ
கமும் அவித்தையால் பொய்யாயுற்ப
த்தியாகித்தோன்றுகிறதெனின் ஜா
க்கிர சொப்பன பேதமும் ஜாக்கிர
ம் வியாவகாரிகம் சொப்பனம் பிரா
திபாஸிகம் எனசத்தாபேதமும் கூறு
வானேன்?

கு. யோக்கிய தேசகால சாமக்கிரி
யின்றி நித்திரா தோஷசகித அவித்
தையால் உண்டாய்த் தோற்றுவது
சொப்பனம் பிராதிபாஸிகமென்று
ம், தேசகாலசாமக்கிரியின்றிய பரமா
த்மாவில் சாக்ஷாத் அவித்தையால் உ
ண்டாய்த் தோற்றுவது ஜாக்கிரம்
வியாவகாரிகம் என்றும்த்விவித சத்தா

பேதத்தையனுசரித்துக் கூறப்பட்டது. விசார திருஷ்டியால் பார்க்கும்போது சத்ராபேதமுமில்லை. ஜாக்கிர சொப்பனங்கட்கு விலக்ஷணதையுமில்லை. சேதனமொன்றுமேபாரமார்த்திகசத்து. அதற்குவிலக்ஷணமானஅனைத்தும் பிராதிபாஸிகமாம். இவற்றிற்கு அவித்தையே உபாதானமும் சேதனம் அதிஷ்டானமுமாம்.

சி. அங்ஙனமாயின் ஜாக்கிரம்போல் பிரஹ்மஞானத்தாலன்றி சொப்பனம் பிரஹ்ம ஞானமின்றியும் நிவிருத்தியானேன்?

கு. சொப்பனத்தின் அத்தியந்த நிவிருத்திஜாக்கிரத்தில் பிரஹ்ம ஞானமின்றிக் கூடாதெனினும் காரண நித்திரா தோஷ நிவிருத்தி விரோத மான ஜாக்ரெ உற்பத்திகளால் கார

ணை அவித்தையில் லயரூப நிவிருத்தி
ஞானமுன் றிக்கூடும்.

சி. முந்தின ஜாக்கிர பதார்த்தமே
சொப்பனத்தின் பின் னுண்டாகும்
ஜாக்கிரத்திலு மிருக்கின்றது. ஒரு
சொப்பனபதார்த்தம் பிறத்தைசொப்
பனத்தில் இல்லை. இவ்விரண்டும் என்
னம் சமமாம்?

கு. சகல பதார்த்தங்களும் அவி
த்தையின்பரிணாமமும் சேதனத்தின்
விவர்த்தமுமே விருத்தி யுண்டாம்
போது இவை கூடவே யுண்டாய் வி
ருத்தி நஷ்டமாங் கால் கூடவே
நஷ்டமாகின்றன. ஆதலால் முந்தின
ஜாக்கிர பதார்த்தமே பின்னுமிருப்
பதாய்ச் சொல்லக் கூடாது. ஆனால்
சொப்பனம்போல் தற்காலமே யுண்
டாகிறது. ஆதலால் இரண்டும் சமமே.

௮. முந்தின பதார்த்த ஞானமே விழித்தவனுக் குண்டாவதால் ஞான சமகாலத்தி லவை யுண்டாவனவாய்ச் சொல்லக் கூடாது. ஆனால் ஞானத்திற்கு முன்னும் பின்னும் பதார்த்தங்கள் ஸ்திரமாயிருக்கின்றன.

௯. ஸ்வப்னத்திலும் தற்காலமுண்டானதிற் சிலகால ஸ்திரதை தோற்றுவதுபோல தற்காலமுண்டான ஜாக்கிரபதார்த்தத்திலும் அவித்யா பலத்தால் சிலகால ஸ்திரத்தன்மை தோற்றுகிறது. அப்பதார்த்தங்களில் தோன்றும் காரண காரிய பாவங்களும் இங்ஙனமே.

௰. ஆத்மாவையறியாத அஞ்ஞானத்தால் சம்சார பந்தமுண்டாயின் அவ்வஞ்ஞானம் எப்போதுண்டாயிற்று?

கு. பிரஹ்மரூப ஆத்மாவையாசிர யித்துள்ள அஞ்ஞானம் அநாதி கற்பி தமே.

சி. ஆதித்தனில் அந்தகாரம்போல ப்பிரகாச ரூபப் பிரஹ்மத்தில் அஞ் ஞானம் எங்ஙனம் சேர்ந்திருக்கும்? இருப்பினும் நன்றே யறியப்பட்டதி லும் சிறிது மறியப்படாததிலு மூண் டாகாது சாமான்யமா யறியப்பட்டு விசேஷமா யறியப்படாததிலேயே அத்தியாசம் உண்டாம். பிரஹ்மத்தி ற்கோ சாமான்ய விசேஷ பாவங்க ளில்லை நிர்விசேஷம்.ஆதலால் பந்தா த்தியாசம் எவ்வாறு பொருந்தும்?

கு. பிரஹ்மம் பிரகாசமாயினும் சுழுப்தியில் சொரூபப் பிரகாசத்தில் அஞ்ஞானம் சேர்ந்திருத்தலால் அத ன் சொரூபப் பிரகாசமாகிய ஸத்வ

வியாபக சாமான்யசேதனம் கட்டையிலுள்ள சாமான்ய அக்கினி இருட்டிற்குவிரோதமல்லாது சாதகமாதல்போல அஞ்ஞானத்திற்கு விரோதியன்று சாதகமாம் கட்டையைக் கடைந்தெடுத்த விசேஷ அக்கினி இருட்டிற்கு விரோதமாதல் போல பிரஹ்மாகார அந்தக்கரண விருத்தியில் ஆரூடமான விசேஷ சைதன்யமே அஞ்ஞானத்திற்கு விரோதியாம். பிரஹ்மம் நிர்விசேஷமே யாயினும் "நான் இருக்கிறேன்" என்று அதன் சத் ரூபம் அஞ்ஞான காலத்திலும் அறியப் படலால் சாமான்யம் போலவும் சேதன ஆனந்தாதிகள் அப்போது அறியப் படாததுபோன்றும் ஞான காலத்தில் அறியப் பட்டது போன்று மிருத்த

லால் விசேஷம்போலவும் அவித்தை
யால் பிரதீதியுண்டாவதனைாயின் சத்
ருபத்தால்நாமும் சேதன ஆனந்தா
நிருபத்தால் அஞ்ஞானமுமாய அந்
நீர் விசேஷப்பிரஞ்சத்தில் பந்த அ
த்தியாசம் பொருந்தும்.

௭. ஜகம்மித்தையாயினும் ஜன்மா
தி துக்கதுவாயிருத்தலால் பொய்
யான பயங்கர சொப்பனம் ஜபாதிக
ளால் தோற்றாதது போல எதனால்
தோற்றுகிறதென்.

௮. என் அஞ்ஞானத்தால் எது
தோற்றுகிறதோ அது அந்த ஞானத்
தாலேயே நிவிர்த்தியாம். ரஜ்ஜு சுக்
திகளின் அஞ்ஞானத்தால் தோன்றும்
சர்ப்பம் வெள்ளி இவை அவற்றின் ஞா
னத்தாலேயே போவதுபோல உன்
ஆத்மாவை யறியாததால் தோன்றும்

ஜகத்தும் ஆத்மஞானத்தாலேயே நீங்கிவிடும். பிரஹ்மம் அகண்டமாய் ஏகரஸமாய் அசங்கமாய் ஜன்மாதியின்றி அதிருசியமாய் நாமரூப ரகிதமாயிருக்கிறது. அதில் கற்பிதஅஞ்ஞானமும் அதன் காரிய ஜீவேசுவர ஜகத்தும் காலத்திரயத்திலும் இல்லாதமித்தையாம். திருசியமனைத்தும் அவ்வஞ்ஞான காரிய புத்திவிலாசமே. பிரஹ்மம் நிச்சலமாய் புத்தியைப் பிரகாசிப்பிக்கிறது. இப்புத்திஜாக்கிரசொப்பனங்களில் பொய்யான தன் விலாசத்தைக் காட்டி சுழுப்தியில் அஞ்ஞானத்தில் லயிக்கின்றது. கானல் ஜலம் மருபூமியை யீரமாக்காததுபோல இம்மித்யாபதார்த்தம் அதிஷ்டானமான எனக்கு ஹானி செய்யாது. நான் சச்சித்தானந்தப் பிரஹ்ம சொரூபன். ஏ

ன்னும் நிச்சயமே ஞானம். இதுவே மோக்ஷ சாதனம். இதனை முன்னமே கூறியுள்ளேன். இருட்டு ஒரு சாதனத்தாலும் நீங்காது வெளிச்சத்தாலேயே நீங்குவதுபோலக் கர்மஉபாசனை முதலிய எதனாலும் நீங்காது எவனது ஹிருதயத்தில் ஞானப் பிரகாசமுதயமாகிறதோ அவனது ஹிருதயத்தை விட்டுக்காரிய சகித அஞ்ஞான அந்தகாரம் நீங்கிவிடுகின்றது. அவன் எப்போதும் அசங்க ஏகரசப் பிரஹ்மரூப ஆத்மாவாயிருக்கிறான். முன் ஒன்றும் உண்டாகவில்லை. இப்போதுமில்லை. இனியுமுண்டாகாது. அறியப்படும்திருசியம் இன்மையின் சாக்ஷிதிருக்கு என்னும் நாமமும், பந்தமின்மையின் மோக்ஷமும், அஞ்ஞானமின்மையின் ஞானமும் இல்லை, இதனை,

யறிந்து கர்த்தவ்யம்விட்டவன் ஞானி அவன் ஒன்றிலும் ஆசையின்றி இந்திரியங்கள் தத்தம் விஷயங்களில் பிரவிருத்தித்தாலும் விட்டாலும் அசங்கனாயிருத்தலின் யாது செய்வதாகக் காணப்படினும் ஒன்றுஞ்செய்யாதவனே.

சி. நான், நான் என நானாவாய் பரிச்சின்னமாய் ராகாதிக் கிலேச சகிதமாய் இருக்கும் ஜீவனுக்கும் ஏகமாய் வியாபகமாய் ராகாதியற்றதாயுள்ள பிரஹ்மத்துக்கும் ஏகத்துவம் எங்ஙனம் கூடும்? ஜீவப்பிரஹ்மங்கள் ஒன்றாயின் கர்மஞ்செய்வதார்? பலனைக் கொடுப்பதார்?

கு. நான் என்பதன் வாச்சியமான அந்தக்கரண விசிஷ்ட ஜீவனுக்குக் கூடாவிடினும் அவ்வகம்பதலக்ஷ்யமா

ள சாக்ஷிக்கு பிரஹ்மத்தோடேகத்வ
ம் கூடும். ஜீவனிடத்துள்ள ஆபாச
பாகமே கர்மஞ் செய்கிறது. தத்பத
வாச்சியமான ஈசனிடத்துள்ளஆபாச
பாகமே பலனைக் கொடுக்கிறது. இவ
ற்றின் லக்ஷ்யார்த்தமான சேதனத்தி
ல் பேதமில்லை. இவ்விருதன்மைகளு
மில்லை.

சி. ஜீவனார்? சாக்ஷியார்? ஜீவனைய
ன்றி சாக்ஷி மலடிமகன்போ லன்று
இருக்கிறது.

கு. கடாகாச சஹித ஆகாசப் பிரதி
பிம்பம் ஜலாகாசமாவதுபோல புத்தி
யதிஷ்டான சேதனமும், காம கர்ம
சஹித புத்தியிலுள்ள ஆபாசனும் சேர்
து கர்த்தா போக்தா சம்சாரியாகிய
ஜீவனாம். ஜீவத்தன்மையின் விசேஷ
ணமான புத்தி அல்லது வியஷ்டி அ

ஞ்ஞானத்தின் அதிஷ்டானசேதனம் சாக்ஷியாகிய கூடஸ்தனும். இவன் உற்பத்திரகிதன். நிர்விகாரி. புண்ணிய, பாப, சுக, துக்க, லோகாந்தர கமன கமன முதலிய தர்மங்கள் ஆபாசனுக்கே. ஆபாசனிலும் விசேஷணமான அந்தக்கரணத்திலேயேயுள்ளன விசேஷிய பாகமான சேதனத்திலில்லை. ஜீவன துவிசேஷியபாகமே சாக்ஷி. ஒரே சைதன்யத்தில் சாக்ஷி பாவத்திற்குஅந்தக்கரணம் உபாதியாயும், ஜீவபாவத்திற்குவிசேஷணமாயுமிருக்கிறது. அதாவது, ஒரே சேதனம் அந்தக்கரணத்துடன் ஜீவனுயும், அந்தக்கரணத் தன்மைவிட்டு சாக்ஷியாயுமிருக்கிறது. என்றால், ஒரே அந்தக்கரணம் விவேகியின் திருஷ்டியால் சேதனத்திற்கு உபாதியும், அவிவேகி

ன் திருஷ்டியால் விசேஷணமுமாம். அதனால், ஒரே சேதனம் விவேகிக்கு சாக்ஷியாயும் அவிவேகிக்கு ஜீவனாயு மிருக்கிறது.

சி ஜீவபேதத்தால் நானாவாய் பரிச்சின்னமா யிருக்கும் சாக்ஷிக்குத்தான் ஏகமான பிரஹ்மத்தோடு ஏகத்வம் கூடுவதெப்படி?

கு. நானாவாய்பரிச்சின்னமாய்உள்ளகடாகாசம் மகாகாசத்தினும் வேறாகாது மகாகாசமாகவேயிருப்பதுபோல நானாவாய்பரிச்சின்னமாயுள்ள சாக்ஷியும் பிரம்ஹத்தினும் பின்னமுறாது பிரஹ்மாகாரமாகவேயிருத்தலால் ஏகத்வம் கூடும். ஆதலால் "அஹம் பிரஹ்மம்" என்றறி.

சி. இந்தஞானம்யாருக்கு? ஜீவனுக்கா? சாக்ஷிக்கா?

கு. ஞானஞ்ஞானங்கள் ஜீவனுக்கேயன்றி சாக்ஷிக்கில்லை.

சி. பிரஹ்மத்தினும் பின்னமான ஜீவனுக்குண்டாகும் "அகம் பிரஹ்மம்" என்னும் ஞானமும் பொய்யாகாதா?

கு. அஹம் சப்தத்தில் விளங்கும் கடஸ்தனுக்கு கடாகாச மகாகாசங்கட்குப் போல எப்போதும் ஏகத்வமுள்ளதால் பிரஹ்மத்தோடு முக்கிய சாமாநாதி கரண்யமுண்டு. அஹம் சப்தத்தில் விளங்கும் ஜீவனுக்கு புருஷனை பாதித்தலால் புருஷன் கட்டையென ஏகத்வம் சித்திப்பது போல பிரஹ்மத்தோடு ஜீவத்வத்தை பாதித்தலால் ஏகத்வம் சித்தித்தலின் பாத சாமாநாதி கரண்யம் உண்டு.

சி. "நான்" எனும் பதத்தில் விள

ங்கும் ஆபாச கூட்ஸ்தரிருவரும் ஒரே காலத்தில் தோற்றுகிறார்களா? வெவ்வேறு காலத்திலா?

கு. ஒரே சமயத்திலேயே தோற்றுகிறார்கள். ஆபாசன் சாக்ஷிக்கு விஷயமாயிருக்கிறான். சாக்ஷியோ சுயம்பிரகாசம் கடாதி வெளிப்பதார்த்தங்களின் பிரத்தியக்ஷ ஞானத்தில் கடாதி விஷயம்வரை சென்று அவற்றின் சமானகாரமடைந்த ஆபாசசகித அந்தக்கரண விருத்தியிலுள்ள விருத்திபாகம் சுபாவமாகவே அஞ்ஞானத்தால் மறைபட்டுள்ள அக்கடாதி விஷயங்களின் ஆவரணத்தைப் பங்கமாக்கியும் தானே விளங்காத அவ்விஷயங்களை கடத்தால் மறைபட்டுள்ள அப்பிரகாசவஸ்து தடியால் கடமுடைபடினும் தானாய்விளங்காததை தீபாதி

பிரகாசிப்பித்தல்போல ஆபாசபாகம் பிரகாசிப்பிக்கின்றது.பிரஹ்ம(ஆத்ம) ப்பிரத்தியக்ஷ ஞானத்தில் சுரோத்தி ர சம்பந்தியான "தத்துவமஸி"*மகா வாக்கிய ரூப சப்தத்தால் "நீ தசம ன்" என்னும் சப்தத்தால் தோன்றும் தசம ஞானம் போலும் புறச்சாதனமி ன்றித் தோன்றும் சுக துக்க ஞானம் போலும் இந்திரிய சம்பந்தமின்றி அ ந்தக்கரணம் உள்ளிலேயே பிரஹ்மா காரமுற அவ் விருத்தி ஆத்மாவின்

---

*வேதாந்தவாக்கியமானது,அவாந்தர வாக்கியம் மகாவாக்கியமென இரண் டாம். ஜீவப் பிரஹ்மங்களின் சொரு பத்தையறிவிக்கும் வாக்கியம் அவாந் தர வாக்கியம்.அதனால் பரோக்ஷ ஞா னமுண்டாம். ஜீவப்பிரஹ்மங்களின் அபேதத்தையறிவிக்கும் வாக்கியம் ம காவாக்கியம். அதனால்அபரோக்ஷ ஞா னமுண்டாம்.

ஆவரணத்தைப்பங்கமாக்க சவுக்காரத்தால் அழுக்குப்போல அந்தக்கரணத்திலுள்ள சொற்ப அஞ்ஞானம்சம் நிவிருத்தியாகவே விரல் முதலிய கண்ணின் சொற்ப மறைப்பு நீங்கவே தோற்றும் பிரஹ்மாண்ட சூரியப்பிரகாசம்போலப் பிரஹ்மமும் தன்தேஜஸால் சுயமே பிரகாசிக்கின்றது. கடத்தால் மறைபட்ட தீபமானது கடமுடையவே தன்பிரகாசத்தில் தீபாந்தரத்தை யபேக்ஷியாததுபோலப் பிரஹ்மப்பிரகாசத்திலும் ஆபாசனது அபேக்ஷையில்லை.

சி. இந்தஞானத்தின் பகிரங்க அந்தரங்க சாதனங்கள் எவை?

கு. நிஷ்காம யக்ஞாதி கரும உபாசனைகள் பகிரங்க சாதனங்களாம். விவேகாதிநான்கு,சிரவணநிமூன்று

தத்துவம் பதார்த்த சோதனை ஒன்று ஆக எட்டும் அந்தரங்க சாதனங்களாம். சுரோத்திரசம்பந்தி "தத்துவமஸி" மகாவாக்கியமே சாக்ஷாத் அந்தரங்க சாதனமாம்.

சி. வாக்கியத்தாலேயே ஞானமுண்டாயின் சிரவணாதிகளின் பயனென்ன?

கு. ஞானம் அதிடம், திடம் (தோஷசகிதம், தோஷரகிதம்) என இருவகை சம்சய விபரீத தோஷசகித மந்தாதிகாரிக்கு வாக்கிய உபதேசத்தால் அபரோக்ஷ ஞான முண்டாயினும் தோஷ சகிதஞானம் பலத்திற்கேதுவாகாமையின் நிரந்தரம்செய்யும் சிரவணாதிகளால் அத்தோஷம்நிவிருத்தியாவதே அச்சிரவணாதிகளின் பலன். சம்சய விபரீத தோஷங்க ளில்லாத

அத்தியந்த நிர்மலஅந்தக்கரணமுள்ள உத்தம அதிகாரிக்கு வாக்கிய சிரவணத்தாலேயே திட அபரோக்ஷஞான முண்டாதலின் தோஷநிவிருத்தியின் பொருட்டு சிரவணாதி யபேக்ஷை யில்லை. இவனே ஸ்திதப் பிரக்ஞனாகிய ஜீவன்முக்தன்.

சி. சிலர் உபாசனை சகித கர்மமும் ஞானமும் கூடி யிருந்தாலேபலத்திற் கேதுவென்கின்றனரே?

கு. தேகத்தின் வேறான ஆத்மா கர்த்தா போக்தா என்னும் ஞானமும், கர்த்தா கர்மம் பலன் இவற்றின் பேத ஞானமும் கர்மத்திற்கேது. பலனோ அநித்யசம்சாரம். ஆத்மா அசங்க பிரஹ்ம சொரூபம். கர்த்தா கர்மம் பலன் இவை ஆத்மாவினும் வேறல்லவென்பது ஞானம். பலன்

சாஸ்வத மோக்ஷம். ஆதலால் இவ்விர ண்டும் எங்ஙனம் சேர்ந்திருக்கும்?

சி. அந்தக்கரணம்உள்ள வரை அத ன் சஹஜ தர்மமான சாஞ்சல்யம் ஞா னிக்கும் விடாததால் அது விதேக முக்திக்கு ஹானி யன்றாயினும் அத னால் ஜீவன்முக்தி சுகம் விளங்காமை யின் விரோதியாகலின் அதை நிவிரு த்திக்க ஞானியும் உபாசனை செய்ய வேண்டாமா?

கு. திடஞானிக்கு சமாதியும் வி க்ஷேபமும் சமமாதலின் அவன் அந்த க்கரணத்தின் நிச்சலத் தன்மையின் பொருட்டு ஒன்றிலும் பிரவிருத்திக்கி றதில்லை. ஞானிக்கு வியவகாரத்திற் கு ஏதுவான அக்ஞானமும், அதன் காரியபேதப் பிராந்தியும், அதன் கா ரியமான ராகத் துவேஷங்களுமோ

இல்லை. பிராரப்தம் மாத்திரமே சேஷம். அது அவனது வியவகாரத்திற்கேது. அதுவும் புருஷ பேதத்தால் நானாவாதலால் பிராரப்த கர்மஜன்ய வியவகாரத்தில் நியமமில்லை. இதனால் ஞானியின் பிரவிருத்தி நிவிருத்திகள் பிராரப்தாதீனமாம். ஆகலின் ஜனகாதிகள்போல போகத்திற் கேதுவான பிராரப்தத்தால் போக இச்சையும் அதையடைதற்கான பிரயத்தனமும், சுகர் வாமதேவாதிபோல நிவிருத்திக்கேதுவான பிராரப்தத்தால் ஜீவன்முக்திசுகத்திலாசையும் போகத்தினருவருப்புமுண்டாம். அந்தக்கரணத்தின்நிச்சலத்தன்மைமாத்திரத்தால்பிரஹ்மானந்தம் விசேஷமாய்விளங்காது பிரஹ்மாகார விருத்தியாலேயே விளங்குமாதலானும் அது வேதாந்த

அர்த்த சிந்தனத்தாலேயே யுண்டாத லானும் இதனாலேயே சஞ்சலமும் நீ ங்கிவிடுதலானும் ஜீவன்முக்திசுக இ ச்சையுள்ளவனும் வேதாந்தார்த்தசிந் தனம் செய்யவேண்டுமன்றி உபாச னை செய்யவேண்டுவதில்லை.

சி. ஞானிக்கு அதிக வியவகாரம் கூடுமா?

கு. வியவகாரத்தின் அதிகத்தால் சுகத்தின் குறைவும், வியவகாரக் கு றைவால் அதிக சுகமுமுண்டாம். ஆ னால் ஞானம் சமமாம். வியவகாரம் ஜீவன்முக்தியின் விலக்ஷண ஆனந்தத் திற்கு விரோதியாயினும் பிரவிருத்தி நிவிருத்திகளில் ஆத்மாவில் பந்தப் பி ராந்தியின்மையின் ஜீவன்முக்திக்கு விரோதியன்று.

சி. ஞானிக்கு அனுத்தம பதார்த்தங்

களில் மித்யாபுத்தி தோஷதிருஷ்டிக ளால் ராக முண்டாகா திருக்க எங்ஙு னம் பிரவிருத்தி கூடும்?

கு. தேகத்தில் மித்யாபுத்தி யிருந் தும் ஞானிக்குப் பிராரப்தத்தால் தே கத்திற் கனுகூலமான பிக்ஷாதிகளில் போலவும், இந்திரஜால வித்தை மித் தையெனத் தெரிந்தும் ஜனங்கள் அதனைப்பார்த்தலில் போலவும், தோ ஷ திருஷ்டியால் பிரதிகூலமெனத் தெரிந்தும் ரோகி அபத்தியம்செய்த லில் போலவும் பிராரப்தத்தால் பிர விருத்தி கூடும்.

சி: ஞானிக்கு ஆசையில்லையென்ற தன் அபிப்பிராயம் என்ன?

கு அவன் அந்தக்கரணம் இச்சா ரூப பரிணாம மடையாதென்பதல்ல. அந்தக்கரணம் கேவல சத்துவ குண

காரியமாகாது அப்பிரதான ரஜோ தமோ குணங்களுடன் கூடின பிரதான சத்துவத்தாலுண்டானவையான குணங்கள் எற்றக்குறைவாயிருப்பினும் அந்தக்கரணமுள்ளவரை ரஜோ குண பரிணாமமான இச்சையுமில்லாதிராது. ஆனால் ஞானிக்கு ஆலைச ஆத்ம தர்மமாகப்பிரதிதியாகிறதில்லையென்பதே அதன் அபிப்பிராயம். அவன் அசங்கன். கர்த்தாவாயினும் அகர்த்தாவே. இதனாலேயே 'ஞானத்துக்குப்பின் இச்சாரத்தால் செய்யப்படும் சுபாசுபகர்மங்களும் புண்ய பாபங்களும் சம்பந்திக்கிறதில்லை' எனச் சுருதியும் கூறுகின்றது.

௫. சுழுப்தியில் போல விருத்தி அஞ்ஞானத்தில் லயித்தலும் அஞ்ஞானாவிருத சுகவிளக்கமுமின்றி தியான

பலத்தால் பிரஹ்மாகார அந்தக்கரண விருத்தி பிரஹ்மப் பிரகாசத்தில் லயித்து ஆவரணரகித ஆனந்த மாத்திரம் விளங்கும் அத்வைதாவஸ்தானரூப நிர்விகற்ப சமாதியில் ஞானிக்கு நியமமில்லையா?

கு. இதனைக்கேட்டு இவனென்ன பேயன்போற் பிதற்றுகிறான் என்றெண்ணிச்சிரித்தனர்.

சி. ஜீவன் முக்திசுகத்தைவிட்டுப் போகத்தில்பிரவிருத்திப்பவன் விதேக முக்தியை விடுத்து வைகுண்டாதி லோகங்களை யிச்சித்தடையானா?

கு. ஜீவன் முக்தி சுகத்தியாகமும் போகேச்சையும் ஞானிக்குப் பிராரப்தத்தா லுண்டாதலானும், ஞானத்தால் நசித்த அஞ்ஞானத்தின் சேஷமும் பின்னுண்டாதலுமின்மையானு

ம், அவனது பிராணன் வெளியில் போகாததால் இந்த லோகத்தில் அல்லது பரலோகத்தில் அந்நிய சரீர சம்பந்தம் பிராரப்தத்தாலுமுண்டாகாமையானும் அவ்விதேக முக்தித்யாகமும், பரலோக இச்சையும், பரலோகப் பிராப்தியும் ஞானிக்குப் பொருந்தாது.

சி. ஜீவன்முக்தியாது? விதேக முக்தியாது?

கு. தேகத்தோடிருப்பவனுக்கு பந்தப்பிராந்தியின்மை ஜீவன்முக்தி. பிராரப்த போகத்துக்குப்பின் ஸ்தூல சூக்ஷ்மாகாரமான அஞ்ஞானம் சேதனத்தில் லயமாதல் விதேகமுக்தி.

ஸர்வ சாஸ்திரங்களின் சாரமான முக்கிய சித்தாந்தமிதுவே.

இதனைக்கேட்டு சிஷ்யன் சொரூப

ஸாக்ஷாத்காரரூப அபரோக்ஷஞானம
டைந்து ஜீவன்முக்தனுயிருந்து பின்
விதேகமுக்தி யடைந்தனன்.

---

ஓம் தத் ஸத்
பிரஹ்மார்ப்பணமஸ்து.

